4.68 கோடி ரூபாய் அதிகப்படியாகக் கிடைக்குமென்று எதிர்பார்க்கப்படுகிறது. இந்தத் தொகையின் முன்னமே கொடுக்கப்பட வேண்டியவைக்கும் 2.5 கோடி ரூபாய் ராஜ்யங்களுக்குக் கொடுபட வேண்டியதாகும். தபால் - தந்தி இலாக்காவிலிருந்து பட்ஜெட்டில் எதிர்பார்த்ததைவிட 1.64 கோடி ரூபாய் அதிகமாக கிடைக்குமென்று தெரிகிறது. திருத்தப்பட்ட மதிப்பீடுகளில், பூர்த்தி செய்யப்பட்ட ஒப்பந்தங்களிலிருந்து சில இலாகாக்களில் எதிர்பாராத வகையில் மிச்சப்பட்ட 5 கோடி ரூபாயும் சேர்த்துக் கொள்ளப்பட்டிருக்கிறது. செலவு: நடப்பு வருஷத்தில் பாதுகாப்பு சர்வீசுகளுக்காக 181.24 கோடி ரூபாய் செலவாகும். பாகிஸ்தானுடன் உறவு நிலைமை சீர்கேடைந்த காரணத்தால், பாதுகாப்புப் படைகளின் அளவை குறைக்க உத்தேசங் கொண்டிருந்ததை ஒத்திப்போடும்படியாயிற்று. ஆயினும், இதனால் ஏற்பட்ட அதிகப்படிச் செலவை சாமான் கொள்முதலாக ஒதுக்கப்பட்டிருந்த தொகையில் கிடைத்துள்ள மிச்சத் தொகையையும் வருமான அதிகரிப்பையும் கொண்டு சரிக்கட்டிக் கொண்டுவிடமுடியும். சிவில் மதிப்பீடுகளில் 22.06 கோடி ரூபாய் அதிகரிப்பு ஏற்பட்டிருக்கிறது. இடம் பெயர்ந்து வந்தவர்களுக்கான செலவில் 4 கோடி ரூபாயும், உணவு சகாயத் தொகையின் செலவில் 12 கோடி ரூபாயும், அதிகம் ஆகியிருப்பதே இதற்கு முக்கிய காரணம். இதுதவிர, கலால் வரிக் கணக்கில் பழைய இந்திய சமஸ்தானங்களுக்குச் சேர வேண்டிய பாக்கித் தொகைகளுக்கு 2.07 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. 1952-53 நிதி வருஷம்: அடுத்த வருஷத்திற்கான மதிப்பீடுகளில் ஹிமாசல பிரதேஷ், விந்தியப் பிரதேஷ், டில்லி, போபால், அஜ்மீர், ஆகியவற்றுக்கான வரவு செலவுக் கணக்குகள் சேர்க்கப்படவில்லை. இந்த ராஜ்யங்களுக்கு அவற்றிற்கென சட்டசபைகள் இருப்பதால் பட்ஜெட்டுகளை அவைகளே தனித்தனியே தயாரித்துக் கொள்ளும். ஆயினும் அந்த ராஜ்யங்களின் மேற்கொண்ட தேவைகளும் அவற்றின் கடன், டெபாசிட், கிராண்ட் கொடுக்கல் வாங்கல்களும் இனிமேலும் மத்திய பட்ஜெட்டிலேயே சேர்க்கப்படும். அந்த ராஜ்யங்களுக்கு அவசியம் ஏற்படும்போது, அவற்றின் ரெவின்யூ பட்ஜெட்டுகளைச் சரிக்கட்டுவதற்காகவும், அவற்றின் பொது இருப்பு நிதிகளின் அன்றாட நிர்வாகச் செலவுக்கு போதிய தொகை இருக்கும்படி செய்வதற்காகவும் மத்திய பட்ஜெட்டிலிருந்து மானியங்கள் வழங்கப்படும். ஆனால் வருமானவரி மூலம் கிடைக்கும் தொகையிலிருந்தோ பங்கு எதுவும் கொடுக்கப்பட மாட்டாது. நிதிக் கமிஷன் 1951 நவம்பர் 1-ம் தேதியன்று ஏற்படுத்தப்பட்டு வேலை துவங்கியது. அதன் முடிவான சிபார்சுகள் வெளிப்படுவதற்கு இன்னும் சிறிது காலம் பிடிக்கும். ஆகையால் வருமானவரிப் பங்கு விகிதமளிப்பதையும், சகாயத் தொகை அளிப்பதையும், மேலும் தொடர்ந்து நடத்தி வரலாம் என்றும், ஆனால் அதன் சிபார்சுகள் மீது செய்யப்படும் இறுதி முடிவானது 1952 ஏப்ரல் 1-ம் தேதியிலிருந்து அமுலுக்குக் கொண்டு வரப்படும் என்ற ஷரத்துக்குட்பட்டே அப்படிச் செய்யுமென்றும் அது சிபார்சு செய்திருக்கிறது. பட்ஜெட் இந்த அடிப்படையின் மீதுதான் தயாரிக்கப்பட்டிருக்கிறது. இப்போதுள்ள வரி விகிதப்படி அடுத்த வருஷ ரெவின்யூ வருமானம் 424.98 கோடி ரூபாய்; செலவினத் தொகை 406.25 கோடி ரூபாய்; மிச்சம் 18.73 கோடி ரூபாய். சுங்கத் தீர்வை மூலம் 190 கோடி ரூபாய் ரெவின்யூ கிடைக்குமென்று மதிப்பிடப்பட்டிருக்கிறது. இந்த வருஷத்தில் அமோகமாகக் கிடைத்துள்ள ரெவின்யூ வருமானம் விசேஷமாகக் கிடைத்திருக்கிறது என்பதையும், சமீபத்தில் சுங்க வரிகளும் குறைக்கப்பட்டிருப்பதால் ஏற்பட்டுள்ள நிலைமையையும் கவனத்தில் வைத்துக் கொண்டுதான் மதிப்பீடு செய்யப்பட்டிருக்கிறது. யூனியன் கலால் வரிகள் மூலம் 86 கோடி ரூபாய் கிடைக்கும் என்று கணக்கிடப்பட்டிருக்கிறது. வருமான வரி மூலம் 150½ கோடி ரூபாய் கிடைக்கும் என்று கணக்கிடப்பட்டிருக்கிறது; பாக்கி வசூலிப்புத் தொகை படிப்படியாய்க் குறைந்துவரும் என்பதையும், பாக்கி வசூலிப்புக்காக சமீபத்தில் மேற்கொள்ளப்பட்ட நடவடிக்கைகள் காரணமாக ஏற்படும் பலன்களை கவனத்தில் வைத்துக் கொண்டுதான் இத்தொகை கணக்கிடப்பட்டிருக்கிறது. வருமான வரித் தொகையில் ராஜ்யங்களின் பங்கு விகிதம் 50.86 கோடி ரூபாய் என்று கணக்கிடப்பட்டிருக்கிறது. அதில் 5 கோடி ரூபாய் பாக்கித் தொகை அடங்கும். தபால்-தந்தி இலாக்காக்களின் மூலம் தொகை 1.16 கோடி ரூபாய் என்றும் ரயில்வே மூலம் தொகை 7.65 கோடி ரூபாய் என்று மதிப்பிடப்பட்டிருக்கிறது. பாகிஸ்தான் பிரிவினை காரணமாகத் தரவேண்டிய கடன் தொகையின் முதல் தவணைத் தொகையாக 9 கோடி ரூபாய் மொத்த மதிப்பீட்டின் பேரில் சேர்த்துக் கொள்ளப்பட்டிருக்கிறது. இந்த மதிப்புகளின்படி உள்ள ரெவின்யூ தொகை 15.91 கோடி ரூபாய் குறைந்துவிட்டது. சுயேச்சை அதிகாரமுள்ள 'B' பிரிவு ராஜ்யங்கள் இணைந்து போய்விட்டதும், இரும்பு இரும்பு வார்ப்பு இனங்கள் விட்டுவிடப்பட்டதும் இக்குறைக்கு காரணம். செலவினங்கள்: செலவினங்கள் மொத்தத் தொகை 406.26 கோடி ரூபாயாக மதிப்பிடப்பட்டிருக்கிறது; அதில் 197.95 கோடி ரூபாய் பாதுகாப்பு இலாகாக்கும், 208.3 கோடி ரூபாய் சிவில் இலாகாக்கும் போகும். பாதுகாப்பு இலாகாவின் தொகை அதிகரித்திருப்பதற்கு ராணுவ உபகரணங்களுக்காகக் கொடுக்கப்பட்டிருக்கும் ஆர்டர்களுக்கான இன் பாக்கித் தொகைகள் இதில் சேர்ந்திருப்பதுதான் பெரும்பாலும் காரணம். ராணுவ எண்ணிக்கை பலத்தைக் குறைப்பது இப்போது இயலாது எனினும், என்னென்ன வகையில் சிக்கனம் செய்யலாம் என்று பார்க்கும் முயற்சி கைவிடப்படவில்லை. ராணுவ அமைப்பு, சாதன சப்ளை ஆகியவைப் பற்றி திட்டமாக பரிசீலனை மேற்கொள்ளப்பட்டிருக்கிறது. அதன் பலனாய் நிர்வாக ஏற்பாடு முழுவதுமே திருத்தியமைக்கப்படும்; காரியத்திறமைக் குறைவுக்கு இடமில்லாமல் செய்யப்படும். சிவில் இனங்களுக்கான 208.03 கோடி ரூபாய் தொகையானது, திருத்தப்பட்ட மதிப்பீட்டில் கண்ட தொகையைவிட 15.32 கோடி ரூபாய் குறைவாக இருக்கிறது. அப்படிக் குறைந்ததற்குப் பிரதான காரணம், உணவு மானியச் செலவில் 13.66 கோடி ரூபாய் குறைக்கப்பட்டுவிட்டதும்; இடம்பெயர்ந்து வந்தவர்களுக்கான செலவில் 3.74 கோடி ரூபாய் குறைக்கப்பட்டுவிட்டதுதான். 'C' பிரிவு ராஜ்யங்களின் ரெவின்யூ பட்ஜெட்டுகளைச் சரிக்கட்டித் தருவதற்கும் அவைகளின் பொதுத் திட்ட நிதியின் நடப்புச் செலவுக்கு வேண்டிய பணம் இருக்கும்படி வைத்துக் கொள்வதற்குமாக